*Tanjore Headquarters Hospital*

*354 *Q.*—SRI M. D. THIAGARAJA PILLAI : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லா தலைநகர் ஆஸ்பத்திரியில் எவ்வளவு படுக்கைகள் உள்ளன ?

(ஆ) அதற்கு சென்ற 3 வருஷங்களில் எவ்வளவு செலவு செய்யப் பட்டு வருகிறது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) 636, Sir.

(*b*) Rs. 8,73,663 in 1955–56, Rs. 9,80,153 in 1956–57 and Rs. 10,74,708 in 1957–58.

SRI A. VEDARATHNAM : இந்த மருத்துவ நிலையத்தை இப்போது இருக்கும் இடத்திலிருந்து வேறு இடத்திற்கு மாற்றுவதற்கு அரசாங்கம் உத்தேசித்திருக்கிறதா ? எந்த இடத்திற்கு மாற்றப்படும் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அதை அடியோடு மாற்றுவதற்கு உத்தேசமில்லை. சில செக்ஷன்கள் அங்கேயேதான் இருக்கும். புதிதாக ஏற்படுத்தப்படும் செக்ஷன்களை காலேஜ் கட்டுகிற இடத்தில் ஏற்படுத்தும்.

*Lignite at Vilambur*

*356 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தென்னற்காடு மாவட்டம் கள்ளக்குறிச்சியை அடுத்த விளாம்பூர் கிராமத்தில் கறுப்பு நிலக்கரி கிடைப்பதை அரசாங்கம் பரிசீலித்ததா ?

(ஆ) அதன் விபரம் என்ன ?

(இ) இது சம்பந்தமாக என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) There is no information available regarding the occurrence of coal in the Vilambur village, Kallakurichi taluk, South Arcot district, as no systematic mapping of the area has been carried out so far. But the general geology of the area does not show any possibility of coal deposits occurring there.

(*b*) & (*c*) Do not arise.

SRI A. VEDARATHNAM : இந்த இடத்தில் நிலக்கரி இருக்கிறதா என்று பரிசீலனை செய்யப்பட்டதா ? யார் பரிசீலனை செய்தார்கள் ? பரிசீலனை செய்தார்கள் என்றால் அதனுடைய ரிஸல்ட் என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : சாதாரணமாக ஜியாலஜிக்கல் சர்வே செய்வதற்கு முன்னால் சில அறிகுறிகள் தெரியும். அந்த மாதிரியான அறிகுறிகள் ஒன்றும் தெரிவதற்கு முன்னால் பரிசீலனை செய்ய முடியாது. அவ்விதம் பரிசீலனை செய்தால் அது வீணாகத்தான் போய்விடும்.

SRI S. NAGARAJA MONIGAR : ஸார், இந்தமாதிரியான செல்வம் நாட்டுக்கு மிக தேவையானது என்பது தெரிந்திருந்தும், மதிப்புமிக்க வேதரத்தினம் பிள்ளை அவர்கள் இதைப்பற்றி சர்க்காருக்கு முன்பே தெரிவித்திருக்கிறார்களா ? அதன் பேரில் என்ன கவனம் செலுத்தப்பட்டது ?

MR. SPEAKER : It is only a suggestion. The Hon. Minister need not answer it.